# கண்ணப்பன்

(ஓர் சிறிய நாடகம்)

சிறுவர் சிறுமிகளுக்காக





கொடுமுடி:
எஸ். பி. வெங்கடேச சர்மா அவர்களால்
இயற்றப்பட்டது.

சேலம் வேலூர்:
...கௌரி அச்சுக்கூடத்தில்
...ப்பிக்கப்பட்டது.

1932 [ அணா 2

# கண்ணப்பன் அவதாரிகை.

மார்க்கா வர்திதபாது காபசுபதே ரங்கஸ்ய
கூர்ச்சாயதே கண்டூஷாம்பு நிஷேச்சவநம்
புரரிபோர்திவ்யாபி ஷேகாயதே கிஞ்சித்
பக்ஷிதமாம்ஸ சேஷகபளம் நவ்யோப
ஹாராயதே பக்திகிம் நகரோத்யஹோவநசா :
பக்தாவதம் ஸாயதே.

1. தோழி, இது சிவானந்தலஹரியில் நாம்படித்திருக்கும் சுலோகங்களில் ஒன்றல்லவா ?

2. ஆம், சிவானந்தலஹரி ஸ்தோத்திரம்தான்.

1. அதைஇப்போது என்னத்திற்காகசொன்னாய்

2. இந்த சுலோகத்தில் சம்மந்தப்பட்ட சரித்திரத்தை நமது சகோதரிகள் இன்று நாடகமாய் நடிக்கப் போகிறார்கள். அதற்குப் பூர்வாங்கமாக இந்த சுலோகத்தை ஆரம்பித்தேன்.

1. இதன் அர்த்தத்தைச்சற்று விவரமாகச்சொல் பார்ப்போம.

பக்தர்களிற் சிறந்தவனாய் விளங்கும் வனசரனது பக்திக்குச்சமானமான பக்தி வேறு யாரிடத்திலாவது இருந்ததா? அவனது பக்தி விசேஷம் எவ்வாறு இருந்ததென்றால், மேடும் பள்ளமும் மண்ணிலும் புழுதியிலும் கல்லிலும் சேற்றிலும் வழியில் எல்லாவற்றையும் மிதித்துக்கொண்டு நடந்த தனதுசெருப்பினால் பகவானது சிரசிலிருந்த நிர்மாலியங்களையெல்லாம் நீக்கினான் தனது வாயிலடக்கிக் கொண்டுவந்த ஜலத்தால்பகவானுக்கு அபிஷேகம் செய்தான் தானவேட்டையாடிய மிருகங்களின் மாமிசத்தை நெருப்பில் வாட்டி வதக்கித் தான்முன்னால் கடித்துப்பார்த்துருசியுள்ளவைகளை ஈசுவரனுக்கு நிவேதனம் செய்தான். இவனுடைய பக்தி இருந்தவிதம் இப்படி.

1. ஓஹோ நீ சொல்வதைப்பார்த்தால் இது கண்ணப்பநாயனார் சரிதை போலல்லவா இருக்கிறது இதை நாடகமாய் நடத்திக்காட்டுவது விசேஷம்தான். இதிலிருந்து நாம் அநேக படிப்பினைகள் கற்றுக்கொள்ளக்கூடும். நானும் உன்னுடனிருந்து நாடகமுற்றிலும் பார்த்துவிட்டுப் பிறகு என்வீடுசெல்லுகிறேன்.

---

## களம் 1 உடுப்பூர் நாகன்சபை.

நாகன் வேடர்கள்.

வேடர்கள்: எங்கள் குலத்தோன்றலே திங்கள்
முறைவேட்டை தாழ்ந்ததால், அங்கண்மலைத்தடம்
சாரல் புனங்கள் எங்கும் அடல் ஏனம் புலி கரடி

கடமை ஆமா வெங்கண்மரை கலையொடு மான் முதலா யுள்ள மிருகங்கள் மிக நெருங்கி மீதூர்ந்து அல்லல் விளைப்பதால் சிலை வேடர் நாமெல்லாம் திரண்டு சென்று வேட்டை ஆடத்தாங்களும் வருமாறு வேண்டுகிறோம்.

நாகன்: தோழர்காள் மூப்பினுலே முன்புபோல வேட்டையினில் முயல்கில்லேன் ஆனது பற்றி என் மகன் திண்ணனை உங்களுக்கு நாதனாக எல்லீரும் கைக் கொள்மின்.

வேடர்கள்: அத்த! இத்தனை காலமும் நினது சிலைக் கீழ்த்தங்கி இனிதுண்டு தீங்கின்றிஇருந்தோம் இன்னம் உனது அருள் வழியே நிற்பதல்லால் அடுத்தநெறி வேறுளதோ அதுவேயன்றி மெய்த்த விறல் திண்ணனை உன் மரபில் சாலமேம்படவே பெற்றளித்தாய் விளங்கு மேன்மைவைத்த சிலைமைந்தனை ஈண்டழைத்து நுங்கள் வரை ஆட்சி அருள்க.

நாகன் : ஆயின் என் செல்வனை அழைமின் சிலர் சென்று மலைமருவு நெடுங் கானில் கன்னி வேட்டை மகன் போகக் காடு பலி மகிழ வூட்டத் தலை மரபின் வந்த தேவராட்டிதனை அழைமின்,

(சில வேடர்கள் செல்லுதல்)

திண்ணன் : அத்தனே போற்றி, என்னை யீன்ற ஐயனே போற்றி, வேடர் குலத் தலைவனே போற்றி, என்னைத் தாங்கள் இங்கு வர உத்திரவளித்தீராமே.

நாகன் : குழந்தாய், ஆம் அழைத்தேன். இங்கு வந்து என் பக்கல் உட்கார்.

தேவராட்டி : அருளே உருக்கொண்ட எங்கள் ராஜாவே வந்தனம். என்னைக் கூப்பிட்டீர்களாமே, வந்து விட்டேன்.

நாகன் : தலை மரபின் வழி வந்த முதியோய் தேவராட்டி; கோட்டமில் என்குல மைந்தன் திண்ணன் எங்கள் குலத் தன்மை, யான் கொடுப்பக்கொண்டு பூண்டு, பூட்டுறு வெஞ்சிலை வேடர் தம்மைக் காக்கும் பொருப்புரிமை புகுகின்றான். அவனுக்கென்றும்வேட் டை வினை எனக்கு மேலாக வாய்த்து, வேறு புலம் கவர் வென்றி மேவுமாறு, காட்டிலுறை தெய்வங்கள் விரும்பி உண்ணக் காடுபலி ஊட்டு.

தேவராட்டி : எஜமானே, நான் இங்கே வரும் சமயம் வழி நெடுகப் பற்பல நற் சகுனங்களை கண்டேன் உங்கள் மகன் வெற்றி பெற்றுக்கீர்த்தியு டன் விளங்குவான் அவன் ஈடும் எடுப்புமற்ற இணை யில்லா வீரன் தங்கள் குலத்திற்கே பெருமை விளைவிக் கத்தோன்றியவன்; அவனது முக விலாசத்தைக்கண்டு இவற்றைக்கூறுகின்றேன் யாருக்குமே கிடைத்தற்கரிய அரும் பெரும் பதவியிலிருப்பான். நான் சென்று வருகிறேன். (போதல்)

நாகன் செல்வனே, சீராளா, திண்ணா, என் கண் மணியே, மூப்பு என்னை வந்தடைந்ததனால் முன்பு

போல என்னுடைய முயற்சினால் வேட்டையாட இனி எனக்குக் கருத்தில்லை. ஆகலால், குழந்தாய் தக்க பருவ முற்ற நீ, எனக்கு மேலாய் மன்னு சில மலையர் குலக் காவலை பூண்டு, மாறெறிந்து மாவேட்டையாடி, என்றும், உன்னுடைய மரபுரிமை தாங்குவாய் அப்பனே.

திண்ணன் : தந்தையே தங்கள் அருளாலும் ஆசீர்வாதத்தாலும் அவ்வாறே மேன்மை யுறுவேன்,

நாகன் : இதோ என் கைச் சிலையையும் வாளையும் இவ்வில்லியர் ஆடையையும் பெற்றுக்கொள்.

திண்ணன் : (பெற்றுக்கொண்டு) அத்தா, போற்றுகின்றேன். (போதல்)

நாகன் : வேடர் குலச் செல்வர்காள், நீங்கள் விரும்பிய வண்ணமே, ஆட்சியின் உரிமையைத் திண்ணனுக்கு அளித்தேன். அவன் கீழ் இன்புற்று இனிதே வாழ எல்லோர்க்கும் இறைவன் அருள் புரியட்டும். இப்போது நாம் செல்வோம். (எல்லோரும் போதல்)



## களம் 2

வனம்:—வேடர்கள், திண்ணன், நாணன், காடன்

நாணன் : தோழ! நாமும் பற்பல மிருகங்களை வேட்டையாடி வெற்றியுடனே விளங்குகிறோம். துஷ்ட மிருகங்கள் வெகுவாய்ச் சஞ்சரிக்கும் மரம் செடிகள்

அடர்ந்த இக்கானகத்தில் கன்னி வேட்டையாட வந்த உமக்கு என்ன ஆபத்துக்கள் விளையுமோ என்று பயந்திருந்தோம். ஆயின் நீரோ மிக்க அனுபவமுள்ளவர் போலவும் தேர்ச்சி பெற்றவர் போலவும் எங்களினும் சிறந்தவராக விருக்கின்றீர்.

காடன் : நாணு ! இவரது கைத்திறமையும், குறி பார்த் தெய்யும் கண்ணின் தீக்ஷண்யமும், காற்றைப் போலப் பறந்தோடும் கால்களின் வேகமும் இதுகாறும் யாரே பெற்றார்? விலங்கினங்களை வேட்டையாடுமுறை எள்ளளவேனும் வழுவாது நடந்து கொண்ட இவர் பெருந் தன்மையை யென்னென்று புகழ்வது !

அதோ புதரில் ஏதோ சலசலவென்று சப்தமாகின்றது. அங்கு பார்த்தனையா, ஒரு பன்றி வெகு வேகமாகச் செல்கின்றது. அவ்வேனத்தைப் பின்பற்றிச் செல்வோம் வாருங்கள்.

திண்ணன் : வாருங்கள் செல்வோம்.

(எல்லோரும்அதைத் துரத்திக்கொண்டு ஓடல்)

நாணன் : காடா ! பார்த்தனையா, அரசிளங் குமாரன் வேகத்தை நொடிப்பொழுதில் பன்றியின் பின்னே சென்று மறைந்தான். வா ! நாம் வேகமாய் ஓடி அவனைச் சேர்வோம்.

காடன் : (இருவரும் ஓடிக்கொண்டே) ஆஹா ! என்ன சாமர்த்தியம், என்ன கைத் திறம். அதோ

எய்துவிட்டான். அம்பைபட்டது பன்றி உயிர்விட்டது நாமும் நெருங்கி விட்டோம். (மூவரும் சேர்தல்)

திண்ணன் : அன்பர்களே ! சற்றுக் களைப்புத் தோன்றுகிறது. நீங்களும் வருத்தமுற்றிருக்கின்றீர் கள். இதோ இவ்வாலமரத்தின் நிழலிற் சற்றிளைப்பாறு வோம்- மிக்க நீர் வேட்கையால் வருந்துகின்றேன். தாகந் தீர்க்கும் தடாகங்களேனும், வாவிகளேனும், ஊற்றுகளேனும், ஓடைகளேனும் சமீபத்தில் உண்டோ சொல்லுங்கள்.

நாணன் : இவ்வாலின் பின்புறத்தே சமீபமாகவே பொன் முகலியாறு ஓடுகின்றது. சென்று நீரருந்தி தாகம் தனித்துக் கொள்வோம்.

திண்ணன் : அவ்வாறே செய்வோம். நாணனே தோன்றும் குன்றில் நண்ணுவோம் நாம்.

காடன் : காண நாம் போவோம், நல்ல காட்சியே காணும் இந்தச் சேண் உயர் திருக்காளத்தி மலை மிசை எழுந்து, செவ்வேகோணமில் குடுமித்தேவர் இருப்பர்; கும்பிடலாம். வா !

நாணன் : அவ்வாறாயின் சீக்கிரமேசென்று திரும் புங்கள். நானும் இவ்வேனத்தி னிறைச்சியைத் தீமூட் டிப் பக்குமுற வாட்டித் தயார் செய்து வைக்கிறேன். நீவிர் வந்ததும் உண்டு இளைப்பாறி நம்பதி செல்வோம்.

திண்ணன் : நல்லது நாங்கள் சென்று வருகிறோம்



## களம் 3

### திண்ணன், நாணன், காடன்.

திண்ணன் : காட! என்ன ஆச்சரியமிது நண்ப, கானலேந்த களைப்பையும் மறந்தேன். எனத்தைக் கொன்ற சிரமத்தையும் துறந்தேன். எவ்வாறு ஏறிச் செல்வதென்று இதுகாறும் மலைப்புற்றிருந்த என் மனத்தே என்னை யறியாது ஊக்கமும் உற்சாகமு முதிக்கின்றன. இதுகாறும் என்னை வாட்டி வந்த பெருந் துயரேதோ விலகியது போலும். ஓர் பரபரப் புண்டாகப் பெற்றேன். பெரும் பாரந் தாங்கிச் செல்லு மோர் ஆடவன் அச்சுமையைக் கீழிறக்கி இன்புறுவது போலும் குதூகலம் கிளம்புகின்றது. சிரமமறியாது மலையேறி விட்டோம். குடுமித்தேவர் ஆலயமும் வந்து விட்டோம்.

காடன் : நம்ம குடுமித் தேவர் நல்ல சக்தியுள்ள தெய்வமாக்கும்; போற்றினரை நன்ருய் ஆற்றுவர். அண்டினரை ஆதரிப்பவர். பக்தியுடன் அவரைப்பணிந் தோர் முக்தி பெறுவர். இருப்பினும் நமது குலத்தவர் அவரை விசேஷமாய் பூஜிப்பதில்லை.

திண்ணன் : வா, நாமும் உள்ளே சென்று அவரை வணங்குவோம். (விக்ரகத்தைப் பார்த்து) இது என்ன பரமன் தலையில் பச்சிலைகள் சாத்தியிருக்கின்றன. கீழே கொஞ்சம் ஜலம் தேங்கியிருக்கிறது. அருகில் அன்னம் கொஞ்சம் போலச் சிந்தியிருக்கிறது.

காடன் : ஓர் வேதியர் தினம் வந்து இவரைப் பூஜித்துப் போவார். பழைய நிர்மால்யங்களைப்போக்கிப் பொன் முகலி நீரால் பஞ்சனமாட்டி, நறுமலர் சாத்தி, நிவேதனம சமர்ப்பித்து, அவரைப் புகழ்ந்து பாடிச் செல்வர். இன்றும் காலையில் அவ்வாறு செய்து போயிருப்பர்.

திண்ணன் : நல்லது ; நீ சொன்ன தன்மையில், நமது குடுமித் தேவரைப் பூஜிக்கு முறை யறிந்தேன். நானுமவ்வாறே செய்வேன். என் அப்பனை மனமாறப் போற்றுவேன்.

(விக்ரகத்தினருகே சென்று நமஸ்கரித்துத் தோத்தரித்தல்)

பாடல்—சுலோகம்—நாமாவளி

சம்போ ! மகாதேவா !! கௌரீசா !!! காளத்தி நாதா !!!! இன்றே நான் பிறந்ததன் பலனையடைந்தேன் உமது திவ்ய தரிசனம் கண்டேன். ஆனந்தம் கொண்டேன். அப்பனே இங்கு நீ தனித்திருத்தல் நீதியோ? உன்னை விட்டு நான் பிரிந்திருப்பேனே? அரைக் கண மேனும் அகலேன், என்னுடன் உடுப்பூர் கொண்டு போவேன். சாமி, நீ தனியே யீண்டுத் தங்குதல் தரித்த லாற்றேன்; ஏமநல் லுடுப்பூருக்கு இன்னே என்னோடு வருதல் வேண்டும்; நீ மன மிரங்காய் எந்தாய் !

காடன் : திண்ண ! இது என்ன கோலம், ஆடுகிறாய், பாடுகிறாய், துள்ளிக்குதித்தோடுகிறாய், உன்னையும மறந்தனை, உலகத்தையும் மறந்தனை, நாணன் காத்திருப்பன், வா போவோம்.

திண்ணன் : எந்நாதனே ! நீ பசித்திருக்கின்றனையோ, அமுதுசெய்ய நல்லிறைச்சி, நானே கோதறத் தெரிந்து, இங்கு கொண்டு வந்து, உனக்கு ஊட்டுவேன். ஆயினும், உன்னை இங்கு எவ்வாறு தனித்து விட்டுச் செல்வேன். கொடிய விலங்குகள் கேட்டை விளைவிக்குமோ, துஷ்ட வேடர்கள் துன்புறுத்துவார்களோ ? அய்யனே ஒன்றுக்கும் அஞ்சேல், சென்று வருகிறேன். ஒரு கணமேனுந் தாழேன். உழுந்துருள் பொழுதின் மீள்வேன். வழங்குறு கொடு விலங்கு வருமென அஞ்சேல், ஐய ! எழுந்து மேல் வந்ததாயின் என்னை ஒய்யெனக் கூவு. எங்கிருப்பினு மிமைப்பொழுதில் வந்து விடுவேன். நான் செல்கின்றேன்.

(போதல்; காடனும் கூடவேசெல்கின்றான்.)

---

## களம் 4

### திண்ணன், நாணன், காடன்.

நாணன் : அண்ணன்மார்களே : ஏது இவ்வளவு நேரம் தாமதித்துவிட்டீர்கள். எப்போது நாம் ஊர் திரும்புவது ? சீக்கிரமே உண்போம் வாருங்கள்.

காடன் : நாணு காரியம் மிஞ்சிப் போய்விட்டது. நமது திண்ணன் மனம் முற்றிலுமே மாறிவிட்டது. பக்தியென்னும் பித்து தலைக்கேறி விட்டது. குடுமித் தேவர் இவன் குடுமியைப் பிடித்துக்கொண்டு விட்டார்.

நாணன் : காட, நீ சொல்வது விளங்கவில்லையே, என்ன சங்கதி? நடந்த விஷயம் என்ன ?

நாடன் : அய்யனைக் கண்டானே இல்லையோ, அழு வழிந்தான், ஐயனைப் போற்றினன், ஐய நீ அமுது கொள்ளவில்லையோ என்பான். நீ தனித்திருத்தல் நீதியோ வென்பான். இதோ உணவு நான் கொணா வேன் என்பான், போதுவான், மீண்டு செல்வன், புல் லுவன், மீளப் போவன், காதலின் நோக்கி நிற்பான், கன்றகல் புனிற்றுப் போல்வான். காளத்திநாதருக்கு இறைச்சி கொண்டு போவதற்கே இங்கு வந்துள்ளான். எது, இனி நம்முடன் இவன் வருவானென் றெண்ணு வதற்கில்லை.

நாணன் : திண்ண, ஏன் சீக்கிரமே உண்டு செல் வோம். வீண் கால தாமதமாகின்றது. ஏனைய வேடர் களும் ஆங்காங்கு தங்கி யிருக்கின்றனர். எல்லோரை யும் சேர்த்தழைத்துச் செல்வோம். உனது தாய்தந்தை யரும் ஆவலுடன் உன் வரவை எதிர்பார்த்தவண்ண மிருப்பர். ஏன் ஒன்றும் பேசாது மௌனமாயிருக் கிறாய் கையில் என்ன அது? கல்லை ஒன்று கொணர்ந் திருக்கிறாய், என்னத்திற்காக ?

திண்ணன் : (இறைச்சிகளை மென்று பதம் பார்த் துக்கொண்டே) இது மிக்கச் சுவையுள்ளது. ஐயனுக் கேற்றது. இதனைக் கல்லையிலிடுவேன், இது உருசியற் றது; ஐயனுக் கேற்காது. ஓஹோ ! மிக்கச் சுவையுள் ளது இது, ஐயனுக்குத் தக்க உணவாகும். இதனையும் கல்லையிற் கொள்வேன். ஐயனுக் கமுது படைக்க இதோ செல்கிறேன். (செல்கின்றான்)

நாரணன் : இனி என்ன செய்குதும். நாம் சொல்வதைக் கருத்திற் கொண்டவனல்ல. நம்மையும் மறந்தான். நம்மவர்களையும் மறந்தான். பெற்றோர்களையும் மறந்தான் உற்றோர்களையும மறந்தான். ஊரையும் மறந்தான். உறவினர்களையும மறந்தான். நாமினிச் செய்வதென்ன இருக்கிறது. சென்று சங்கதிகளை நாகனிட முரைப்போம். (இருவரும் போதல்)



## களம் 5. திண்ணனர்

திண்ணனர் : ஐயனே, உமது முடிமிசை மலரைக் காலில் வளைத்த செருப்பால் மாற்றினேன். விமலனே, வாயின் மஞ்சன நீர் தன்னை உமது முடிமேல் விட்டேன். காளத்தி மலைமிசைத் தம்பிரானே, எனது தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தை, உமது முடிமிசை வணங்கிச் சாத்தினேன். இக்கல்லிலை மிசைப் படைத்த ஊனும் திருவமுதை இதோ எதிரே வைத்தேன், வள்ளலே, கொழுவிய தசைகளெல்லாம் கோலினல் தெரிந்து கோத்தங்கு அழலுறு பதத்தில் காய்ச்சிப் பல்லினுல் அதுக்கி, நாவில் இனிமை பார்த்துப் படைத்தேன். இவ்விறைச்சி சால அழகிது, நாயனீரே, அமுது செய்தருளும். ஸ்தோத்ரம்-தமிழ்-ஸம்ஸ்க்ருதம்

## களம் 6 சிவகோசரியார்

சிவகோசரியார் : ஜகதீசா. ஜகந்நாதா, ஜகத்பதே, ஜகத்ரக்ஷகா, அண்ணலே, அருட்கடலே, அருட்பெருஞ்சோதியே, அமலனே, ஆதிமத்யாந்தரகிதனே, ஆசிருதரக்ஷகா, ஆனந்தசுவரூபா, ஆபத்வாந்தவா, இது

என்ன கோலம். இது என்ன கால விபரீதம். இது யார் செய்த வேலை இதையும் நீ மன மொப்பினையோ, எங்கு பார்த்தாலும் எலும்பும் ருதிரமும், தசையும், ஏகமாகச் சிந்திச் சிதறிக்கிடக்கிறதே. உனது பலி பீடத்திலு மல்லவோ ஏறிவிட்டது அநாசாரம், அநாக ரீகம், அநுசிதம், அஸம்பாவிதம் அடுக்காத காரியம். அந்தோ! ஒரு நாளா, இரண்டு நாளா, நாலைந்து நாட் களாக இதுவே வேலையாகி விட்டதே. அலகெடுத்துக் கூட்டுவதும், சாணமிட்டு மெழுகுவதும், சம்ப்ரோக்ஷ ணம் செய்வதும் யாரால் ஆகும். பொல்லா வேடர்கள், கொடிய கிராதர்கள், பழி பாவமறியாப் பாதகர்கள், கொள்ளை கொலை யஞ்சாக் குறவர்கள். மதுபானத்தால் மயக்குற்று மதிமயங்கிக் கிடக்கும் மறவர்கள், அடாது செய்துவிட்டனரே, அந்தோ படாதபாடுபடுவேனன்றோ! இறைவனே, இன்னம் எவ்வளவு நாள் இந்த இன்னல்; இன்னம் கருணையில்லையோ, கருணை வள்ளலே! கர்த் தனே! கண் பாராய், இவ்வவதி இனியேனும் ஏற் படாது செய்வாய் சச்சிதானந்தனே.

அசரீரி: அந்தண, அறியாய் நீ அவன் பக்தியை, அவன் செய்யும் பூஜையின் பெருமை பகரற்பாலதோ. அது நமக்கிடும் அவன் செய்தி அறைகுதும். அம்ம! தெய்வ நதி பல படிந்து நோற்றும், அவையில் தானங் கள் செய்தும், விதிபுறங் கண்டு பெற்ற மெல்லெழின் மகன்மேல் தாய்க்குப் புதிய அன்புஅனைத்த, அனைத்த அப்புண்ணியற்கென் மேலன்பு அவர் மனமே கோயி லாம். அவர் வாக்கே வேத மந்திரமாம் அவர் உமிழும் நீரே கங்கையாம். அன்புடன் அர்ச்சிக்கு 'மலர்கள் நல்ல சுகந்த பரிமள மலர்களாம். அவர் செய்யும் நிவே தனமோ திவ்ய தேவாமிர்தமாம் அவர் அன்பின் போக்கை நீ அறிகிலை போலும் நாளை வந்து நேரில் காணுதி.

சிவகோசரி: அசரீரி உரைப்பதும் புதுமையாயிருக்கின்றது நாளை நடுப்பகலுக்குப் பின்னர் வந்து இங்கு மறைந்திருந்து நேரில் உண்மை யறிவேன்.

களம் 7 திண்ணன், சிவகோசரி (மறைவில்)

திண்ணன்: (பூஜா திரவியங்களுடன் திருப்பி வருங்காலை) இதென்ன என்றுமில்லாது இன்று பற்பல உத்பாதங்கள் தோன்றுகின்றன இவற்றை நோக்கின் இரத்தக் குறியையன்றோ குறிக்கின்றன. என் நாதனுக்கு ஏதாவது இடையூறுற்றதோ, விலங்கினங்கள் வாதை செய்தனவோ? விலங்கிலுங்கொடிய வேடர்கள் ஏதாயினும் ஊறு இயற்றினரோ? ஏன் இவ்வாறு துர்சகுனங்கள் தோன்றுகின்றன. ஓடோடியும் சென்று பார்க்கிறேன், (ஈசுவரனை அணுகும் சமயம், கண்ணில் இரத்தம் வடிவதைக் கண்டு) அந்தோ! எந்தாய், மலையிடை யெனக்கு வாய்த்த மரகதமணியே, சொம்பொன் இலகொளிக் குன்றே, எம்பிரான், என் கோவே, நின் கண் புண்ணீர் கலுழ்தரற்கென்னை கொல்லோ காரணம் திருவாய் சற்றும மலர்கிலை யென்சொல், ஐயனே இவ் விபரீதம் விளைந்ததென்ன; சற்றுரையீர், (கண்ணைத் துடைக்க மேலும் ரத்தம பெருகக் கண்டு) ஏதேது மேலும் மேலும் ரத்தம் அதிகமாய்ப் பெருகுகின்றதோ இங்கிருந்து என் செய்வது (போய் பற்பல பச்சிலைகள் முதலியன கொணடு வந்து தேய்த்து பிழிந்தும் ரத்தம் நிற்காதது கண்டு) மன்னே, மரகதமே, என் செல்வமே, என்னப்பனே, ஏனோ இவ்வாறு அவதிப்பட நேர்ந்தது. மருந்து நான் அறிகிலேன், என் செய்வேன். அந்தோ இவ்வாறு அவஸ்தைப் படல் தருமோ? தாளேன், சற்றுந் தாளேன், ஈசா, (என்று நின்ற வண்ணம் சற்று யோசித்து) ஆஹா! அவ்வாறே செய்வேன். ஊனுக்கு ஊனிடல் முறைமைய, எனது அய்யன் கண் இழக்க என் கண்களால் ஆவதென்ன? எனதுகண்ணைத் தோண்டி யப்புவேன். (அவ்வாறே செய்ய ரத்தம் நின்று விடல்) ஓகோ, நன்று நன்று, இன்று நான் செய்த செய்கை

நன்று, ஐயனே, இனி அவதிப்படேல். என் நாதனே இன் புற்றிரும் (மறு கண்ணில் ரத்தம் பெருக) இது என்ன ஆச்சரியம், இன்று என்ன குடுமித் தேவருக்கு ஆபத்து மேலாபத்தாய் நேருகிறது. ஆயினும் நான் அஞ்சுகிலேனே மற்றுமுள்ள கண்ணையு மிடந்து அப்புவேன். (அவ்வாறே, தன கால் செருப்பால் ஐயன் இடதுகண்ணில் குறி வைத்துக் கொண்டு தனது மற்ற கண்ணையும் தோண்டும் சமயம், சிவலிங்கத்தினின்றும் ஓர் கரம் தோன்றி அவனது வில்லேந்திய கரத்தைப் பிடித்துக்கொண்டு)

அசரீரி: கண்ணப்பா நில். என் கண்ணே பொறு, வேண்டாம் வேண்டாம், வீணில் கண்ணைப் பிடுங்காதே, இதோ இரத்தம் நின்றுவிட்டது. எனது பக்தர்களிற் சிறந்த உத்தம பக்தனை இவ்விதம் செய்ய வேறு யார் தான் துணிவார். மெச்சினேன், உனது உண்மை பக்தியை, செல்வக் குழந்தாய், என்னை விட்டு இனிப்பிரியேல் உனக்குச் சண்டேசுவரனார் பதத்தைத் தந்தேன். இன்புடன் என்றும் எனது வலது பாகத்தில் வீற்றிரு. (மறைதல்)

சிவகோசரியார்: பக்தியென்றால் இதுவல்லவோ பக்தி. வெளிவேஷமில்லா உண்மை பக்தி. வாய்ப் பேச்சில்லா. உண்மை பக்தி, தன்னை மறந்தே பேரின்பம் பெருகும் உண்மை பக்தி. மனோ வாக்கு காயங்களில் மாறுபடா உண்மை பக்தி. உலகத்தோர் கண்டு ஆனந்தித்துக்கொண்டாடும் அபூர்வ பக்தி, வீணில் இவன் செயல்களை தூஷித்தேன். யாராயினென்ன? எவராயிருப்பினென்ன? இவ்வித பக்தர்களைப பாராட்டாமல் பதறவிடுவானோ பக்தவத்ஸலன். ஆயின் என் கதி என்னவது? அனவரதமும், அமலனடி அன்புடன், ஆற்றிப்போற்றி வந்தேனே, சுயம்பிரகாசனே, ஆனந்த ரூபனே, அருட்பெருஞ்சோதி, கருணை வள்ளலே, கால காலனே, காளத் தங்கிய சுந்தரனே, சிவகாம சுந்தரி மணாளனே, நடராஜனே, காளத்தியப்பனே, போற்றினேன். இதுகாறும் உன்னையே அண்டியிருந்த எனக்கும் நற்காலம் கிட்டும் வண்ணம் இன்னம உன்னைப் போற்றிய வண்ணமே என் காலங் கழிப்பேன். ஆயின் ஓர் சந்தேகம். உமது கண்ணைப் போக்குவானேன், அவனது கண்ணைப் பிடுங்குவானேன், இதன் உண்மையறியாது திகைக்கின்றேன்; ஓ

தெரிந்து கொண்டேன். அநாசாரச் செயல்களில் ஈடுபட டிருப்பவர்கள் கண்ணை இழப்பார்கள் என்று நாம் சாதாரண மாய்ச் சொல்வது உலக வழக்கம் அதனாலேயே ஆசா விரோதமான கைங்கரியங்களை ஏற்றுக்கொண்டதன் பலனா உலகத்தார் அறியும் வண்ணம் ஜகதீசன் தமது கண்ணையே போக்கிக்கொண்டார். தமது பக்தன் செய்த அனுசார கிரு த்யங்களுக்காக இன்னும் ஓர் பிறப்பு ஏற்படாமல் இப்பிறவ யிலேயே அவனது கண்ணைப் போக்கி ஆட் கொண்டார் ஈசன் பெருமையே பெருமை, அவரது கருணையே கருணை

அசரீரி : வாளதவம் அந்தண, முற்றிலுமுண்மையே நீயும் எனது சிறந்த பக்தனே, உனக்கும் நற்கதி கிட்டும் விதியின் வழி யேற்பட்ட இப்பிறவிததலை தீர்ந்ததும், உய பதமுறுவாய். அண்டினோரை ஆதரிப்பவனாகிய நான் உன்னை கைவிடேன் நான் "கண்ணப்ப" என்று அழைத்தத காரணமாகத் திண்ணனார் இன்று முதல் கண்ணப்பன் என கிற பெயருடனேயே சிறந்து விளங்குவான். அவன் சரிதை யெல்லோரையுமே புனிதர்களாக்கும். பொங்கும் மங்கள எங்கும் ஓங்குக. இனி நீ செல்லலாம்.

## சிவகோசரியார்—ஸ்தோத்திரம்

ஒளியானை யன்பரிடத் தொளியாதானை
உயர்நிலநீர் தீவளிவா னாயினானை
அளியானை அலர்க்குழல்வீ டளியாதானை
அறிவானைத் தீமைநெறி யறியாதானை
வெளியானை விளங்குபொழில் வடிவினானை
மிளிரடியா ருளக்கோயி லுறைகின்றானைக்
களியானை யருண்மழை பெய்காரினானைக்
கருதுவோ ரின்பவுளங் காண்பர் தாமே.
இனியானை நினைதோறு மினிக்கிற்பானை
இசையானை நன்மையொடு மிசைந்தான் றன்னை
தனியானை யெவற்றினின்றுந் தனிக்கிற்பானைத்
தணியானை உமையூடத் தணிந்தான் றன்னைப்
பணியானைத் தீமைகண்டு பனிக்கிற்பானைப்
பணியானை யன்பர்சொற்குப் பணிந்தான் றன்னை
குனியானை அம்பலத்திற் குனிக்கிற்பானைக்
குறிக்கொண்டா ரின்பவுளங் கூடுவாரே. போதல்

மங்களம்,

உ

# ஸ்ரீ கௌரி பிரஸ்,

வேலூர்-சேலம்.



எமது அச்சுக்கூடத்தில், மண்டிகளுக்கு வேண்டிய பேரேடு குறிப்புவகையருக்களும் வக்கீல்களுக்கு வேண்டிய சகல பாரங்களும், ஸ்கூல்களுக்குத் தேவையான நோட் புஸ்தகம் முதலியவைகளும் குறைந்த சார்ஜுக்கு செய்து கொடுக்கப்படும்.

லா, புஸ்தகம் முதலியவைகள் கில்ட்டுடனும் சுத்தமாக பைண்டு செய்து கொடுக்கப்படும்.

குறித்த காலத்தில் குறைந்த சார்ஜுக்கு செய்து கொடுக்கவேண்டுமென்பதே எங்கள் நோக்கம்.